

ஸ்ரீவிஷ்ணுசித்த குலநந்தன கல்பவல்லீம்
ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தந யோக த்ருச்யாம் ।
ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்
கோதாமநந்யசரண: சரணம் ப்ரபத்யே ॥

"பெரியாழவாருடைய குலமாகிய தோட்டததிறகுக கறபகக கொடி போன்றவளாய, திருவரங்கப்பெருமானாகிய ஹரிசந்தன மரத்தோடு சேரந்திருபபதால் காண அழகியவளாய், பொறுமையே, பூமிதேவி யையே வடிவுகொணடவளாய் கருணையால மறறொரு பெரிய பிராட்டி போனறவளாயுளள ஆணடாளை வேறு கதியறறவனாய் சரணமாக அடைகினறேன."

--தேசிகரின ஸ்ரீகோதாஸ்துதி-1.



# ஸப்தகிரி

நவம்பர் - 1995


தனிப்பிரதி ரூ. 2 மலர் 26

வருடச்சந்தா ரூ. 24 இதழ் 6





பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : ஸ்ரீமணவாள மாமுனிகள் --சித்திரம்: கே. ஜெகதீஷ் |
| முதல் உள்ளட்டை | : பூததத்தாழ்வார் |
| 2-வது உள்ளட்டை | : பேயாழ்வார் |
| பின்னட்டை | : ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில் நாராயணவனம் (ஆ.பி.) |
| உள்ளே | : கொல்ஹாபூர் ஸ்ரீமகாலக்ஷ்மி (மகாராஷ்ட்ரம்) ஸ்ரீபத்மாவதி தாயார் - திருச்சானூர். |

JAGADISH

# உங்களுடன்....

அன்பையும் பாசத்தையும் நேரிடையாக விலைகொடுத்து வாங்க முடியாவிட்டாலும், அவற்றைப்பெறுவதற்கு வழிவகுக்கும் வழிமுறைகளையா வது விலைகொடுத்து வாங்கி விடலாம். முதியோர் மற்றும் அனாதை இல்லங்களும், குழந்தைகளைத் தத்து எடுத்தலும் இவற்றிற்கு ஓரளவு உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம். இவ் அன்பையும், பாசத்தையும் மீறி 'கருணை' என்ற ஓர் உணர்வு உள்ளது. இவ்வுணர்வினை விலைகொடுத்து வாங்கிட முடியுமா? விலைக்குத்தான் கிடைத்திடுமா? என்பதைப்பற்றிச் சிறிதே சிந்தித்தோமேயானால், இக்கருணையின் சிறப்பு விளங்கிடும்.

அன்பையும் பாசத்தையும் விலங்குகளுக்குக்கிடையேகூட நாம் காண லாம். ஆனால் கருணை எனும் இவ்வுயர் உணர்வு இம்மானிட இனத்திற்கே உரிய ஒன்றாகும். ஆயினும் ஆணினத்தாரிடம் இக்கருணையானது 'தோன்றி மறையும்' உணர்வாகத்தான் பொதுவாக அமையும். ஆனால் கருணையின் ஊற்றாகப் பெண்ணினம் திகழ்கின்றது. பெண்மையோடு ஒன்றியுள்ள தாய்மை உணர்வே இதற்குக்காரணமாகும். மென்மையின் பிரதிநிதியாக விளங்கிடும் பெண்மையின்பால் அன்பையும் பாசத்தையும் பலன் எதிர்பா ராது தோற்றுவித்திடக்கூடிய ஆற்றல் இக்கருணை உணர்வுக்கு உண்டு. சாலையில் அடிபட்டு சாகக்கிடக்கும் ஒருவனைக்கண்டு ஓர் ஆண் 'ஐயோ பாவம்' என்று கூறினாலும், அடுத்தவன் வந்து அவ் ஆணிடம் 'உன் மகன் கீழே விழுந்து காயம்பட்டுள்ளான்' என்று கூறியதும் 'ஐயோ மகனே' என்று சாகக்கிடந்தவனை மறந்து, சொந்த சோகத்தில் மூழ்கிவிடுகிறான். அதே நேரத்து வீட்டில் இருக்கும் ஒரு பெண் சாகக்கிடந்திடும் அவ்வொருவனைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அவள், அவன் மீதும் அவனைப் பெற்றவர்கள் மீதும் அவளையும் மீறி அனுதாபம் கொள்கிறாள். அவர்கள் நிலையை எண்ணி சோகிக்கிறாள். ஆம், இச்சாலை விபத்து அவனுக்கு ஒரு செய்தி யாகிறது. அவளுக்கோ ஒரு மானசீகமான அனுபவமாகிறது. இதுதான் ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள 'கருணை' வேறுபாடு. கருணையின் முழு வெளிப்பாடு ஒரு பெண்ணுக்குத் தாய்மைப்பதவி கிடைத்தவுடன் பெரிதும் வெளிப்படுகிறது. அத்தகு பெண்மை, தன் கருணை உணர்வைக் காட்டிட இடமோ, இனமோ, நிறமோ பார்ப்பதில்லை. மன்னித்தலும், மறத்தலும், அரவணைப்பும் அவள் பேதமையைக்காட்டினாலும், அவையே அவளது பெருமைக்குப் புகழ் சேர்க்கின்றது.

மன்னிப்பும் மறத்தலும் இல்லாதிருந்தால் இவ்வையகம் பகைமையின், பொறாமையின், கோபத்தின், வெறுப்பின், ஏமாற்றங்களின் நிலைக்களனாக அமைந்திடும். தந்தை- குழந்தை உறவைவிட தாய்-குழந்தை உறவு புனிதமா னது; வலுவானது. ஏனெனில், ஒரு தாயின் கருணை உணர்வு ஊடே, தாய்மையின் பெருமை பேசும் அன்பும், பாசமும் பால்மூலம் குழந்தைக்கு ஊட்டப்படுகிறது. இத்தகுப் பெருமையும், சிறப்பும், ஆற்றலும் கொண்ட

ஒரு தாயின் நிலை உணர்ந்தே வைணவ சமயம் அத்தாய்க்கு முதலிடமும், முக்கியத்துவமும் தந்துள்ளது. பொதுவாக ஒரு தந்தை தன் குழந்தையிடம் குற்றம், குறை காண்பான். கண்டுவிட்டாலோ தண்டனையும் தந்திடவே துடித்திடுவான். ஆனால் அதற்கு நேர்மாறாக தாய் அமைவாள். குறையிலே நிறைகண்டு மகிழ்பவள் அவள். இதற்காக உலகம் முன் பரிந்துரைத்து வாதாடவும், ஏன் தண்டனை கூட ஏற்க முன்வருபவள் அவள். அத்தகு பொறுமையும், தியாக உணர்வும் கொண்ட தாயின் மூலம் தந்தையின் அரவணைப்பைக்கூட பெற்றிட முடியும். ஆம் குறையிருந்தாலும், குற்றம் புரிந்தாலும் மலர்மகள் கருணையினால், பரிந்துரையினால், இறுதிப்பய னான அம்மாயவனின் திருவருள் பெற்றிடலாம். ஏனெனின் பகவானின் எட்டுத் திருக்குணங்களின் ஒன்றான கருணையின் மறுஉருவமாக அம்மலர் மேல்மங்கை திகழ்கின்றாள்.

"எம்பெருமான் திருமார்பை விட்டுக் கணமும் பிரியாதவளாய், பட்ட மஹிஷியாய், சேதநர்களுக்காக பெருமானிடம் பரிந்துபேசும் புருஷகாரமாய், சேதநர்கள் செய்யும் ப்ரபதிக்கு எம்பெருமானுடன் சேர்ந்து நிற்கும் உபா யமாய், அதனால் வரும் மோக்ஷத்தால் அவனுடன் சேர்ந்து பயனாய் நிற்கும்" அவ் அலர்மேல்மங்கைத்தாயார் கோயில் கொண்டிருக்கும் திருச்சா னூர் திருக்கோயிலின் இவ்வருட 'பிரம்மோத்ஸவ' பெருவிழா 19-11-95 முதல் பத்துநாட்கள் வெகு விமரிசையாக தி.தி. தேவஸ்தானத்தாரால், அண்மை யில் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட்ட 'திருமலை பிரம்மோத்ஸவத்திற்கு' இணையாக கொண்டாடப்பட உள்ளது. பூமகளின் புருஷகாரத் தன்மை யின் பெருமையினை - சிறப்பினை பார் உணரும் வகையில், மாதவன் மார்பில் மாண்புடன் விளங்கிடும் மலர்மகளின் கருணை உள்ளத்தை - அருட்பார்வையினை - அடைக்கல ஆற்றலை அனைவரும் அனுபவித்திடும் வகையில் இப்பத்துநாள் 'பிரம்மோத்ஸவம்' இந்து சமயப்பெருமையினை யும், வைணவ சமயப்பொலிவினையும் படம்பிடித்துக்காட்டிடும். இதுபோது திருச்சானூர் திருத்தலம் வேத மந்திர ஒலிகளால் எதிரொலிக்கப்பட்டு, வேள் விப்புகையினால் சூழப்பட்டு, அறிஞர்களின் சமயச் சொற்பொழிவுகளாலும், கலைஞர்களின் இன்னிசை நிகழ்ச்சிகளாலும் ஒலித்திடும் சமய உணர்வால் தாக்கப்பெற்று 'பிரம்மோத்ஸவ'த்திற்கு ஒரு புதுப்பொருளைத் தந்திடும் வகையில் திகழ்ந்திடும். இத்தகு அரியதொரு சமய நிகழ்ச்சியினைக் கண்டு களித்துப் பங்கேற்றிட, 'ஸ்ரீபத்மாவதி தாயாரின்' பிரம்மோத்ஸவத்திற்கு வரு கைபுரியுமாறு பக்தர்களை இருகரம் கொண்டு தி.தி. தேவஸ்தானம் இவ் இதழ்மூலம் அழைக்கின்றது.

அனைவரும் வருக! அன்னையின் அருள் பெறுக!!

(ஒம்.) என். ரமேஷ் குமார்

செயலாட்சித தலைவர்.



# செய்திச் சுருக்கம்



## பார் புகழ்ந்த பிரம்மோத்ஸவம்

எநத ஆணடும அமைநதி டாத வகையில் இவவாணடின திருமலை ஸ்ரீவேஙகடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந் திர பிரமமோதஸவம 25-9-95 முதல் 4-10-96 வரை வெகு விமர சையாகவும், கோலாகலமாகவும கண்ணையும் கருத்தையும் கவ ரும் வகையில் இனிதே நடை பெறறது. 'பூலோக வைகுண டம்' எனும கூறறுககு ஒரு வடி வம் கொடுத்தாறபோனறு 'திரு மலை'யானது வணணவிளககுக ளாலும, மலரகளாலும் அலங கரிக்கபபடடும், 'கோவிந்தநாம' கோஷததால நிரம்பி, இநது சம யத்தின பெருமையைச் சொல லாநின்றது.

நிமிடத்திறகு ஒரு பேருநது செயலபடும வகையில 200 பேருந்துகள இபபத்து நாட களின்போது திருமலைக்கும் திருபபதிககும் சென்ற வண ணம், வந்த வண்ணமாக ஓடின. சென்னை, பமபாய், விசாகப்பட் டினம் எனறு நாட்டின முக்கிய நகரஙகளிலிருநது திருப்பதிக் குச செல்லும வகையில் சிறப்பு இரயில்களும், அதிகபபடியான பெட்டிகளும் கொணட இர யில்களும் இயங்கின. குறைந்த அளவு ஊழியர்கள கடமை யாற்றப் பயனபட்டு அத னால் பெறபபட்ட இடவசதிகள் யாததிரிகர்களுக்குக் கொடுக்கப் பட்டன. எந்த ஆண்டும் இலலாத வகையில் எந்தவித மான நெரிசல பிரச்சனையு மினறி நாளும ஐம்பதாயிரம் யாததிரிகரகள 'வாகன சேவை' காடசிகளைக கணடு களிததி டும் வகையில திருமலையின் நான்கு மாடவீதிகளிலும தறகா லிக பத்து வரிசை கொண்ட தாழ்வாரங்கள அமைக்கப்பட் டன. கோயில நிகழச்சிகளை யும, வாகன சேவைகளையும் திருமலையே கண்டு மகிழ் திடும் வகையில், அவைய வும் தொலைக்காட்சி பெட்டி கள் மூலம் ஒளிப்பரப்பப்பட் டன. திருமலை மாடவீதிக ளில் எளிதாக பக்தர்கள் வந்து போகும் வகையில், பண்டைய நியதிப்படி ஏழு நுழைவாயில் கள அமைக்கப்பட்டன. இவ் நுழைவுவாயில்கள் அமைத்திட ஆகும் செலவினை சென்னை யைச் சார்ந்த பக்தர் ஒருவர் ஏற் றுக்கொண்டார் என்பது குறிப் பிடத்தகுந்த ஒரு செய்தியாகும்.

திருமலையிலேயே வளர்க்கப் பட்ட பல வணண மலர்க ளைக் கொண்ட மலர்க்கண் காட்சி ஒன்று கண்களுக் கும், தாவரவியல் வல்லுநர்க ளுக்கும் பெரு சிந்தனை விருந் தாக அமைந்தன. தி.தி. தேவஸ்தானததாரின் மருத்து வததுறை சார்பில் ஆயுர்வேத மருந்துகளும, கை வினைப் பொருடளும, கிடைக்கபபெறும 'லேபாக்ஷி' விற்பனை அங்கா டியும பொதுமககளுள் பேருதவி யாக அமைந்தன. திருமலைக்



கோயில பிராகார சுவர மீதும், கோயிலைச சுற்றியும தி.தி. தேவஸதான மின்துறை ஊழி யரகளால வண்ண மினகுமிழ விளககுகளால அமைககப்பட்ட 'கோவிநத்' நாமம, தஸாவதாரங் கள, கீதோபதேசம், ஸ்ரீநிவாசன - பதமாவதி, ஆணடாள ஆகிய திருவுருவ வேலைபபாடுகள பக் தியுணரவை மேமபடுததுவதா கத திகழ்நதன.

ஒவ்வொரு வாகன சேவை யின போதும் உடனவநத, கேரளக்கலைஞரகள பஙகேறற 'சணடி வாதயம', உடுபபிக கலைஞரகள பஙகேற்ற 'பஞச வாத்யம்', கேரள மாநில பாணி யில் விளஙகிய 'எருது' அலஙகாரம் ஆகியன இவ வாண்டு பிரம்மோதஸவததி னைத் தனித்து இனம காட டின.

இப்பததுநாட்களின போது ஹரிதாஸரகளின பஜனைகளா லும, வேதவிற்பன்னரகளின வேதகோஷஙகளாலும, நாட்டுக் கலை கலைஞரகளின கோலாட டம கும்பி நிகழ்ச்சிகளாலும், அரையரகளின திவய பிரபநத கோஷ்டி நிகழசசிகளாலும திரு மலையானது வைணவ சம யததின் நம்பிக்கை ஒளியாக ஒளிர்நதது. இதறகுமேலும மெருகு சேரததிடும வகையில தி.தி.தேவஸதானததாரின தர்ம பிரசாரபரிஷத, ஆழ்வார திவ யபிரபந்தத்திட்டத்துறை, தாஸ ஸாகித்ய திட்டததுறை ஆகிய வற்றின சாரபில நடைபெறற சமய நிகழசசிகள அமைநதன.

தோமாலா, அரசசனை நிகழச் சிகளின்போதும் 'க்யூ' அனும திக்கப்பட, இதுபோது சுமார் பத்தாயிரம் பக்தர்கள் இறைவ னைக் தரிசிக்க வழிசெய்யப்பட்

## பிரம்மோத்ஸவ வருமானம்

| | 1994 ரூ. | 1995 ரூ. |
|---|---|---|
| உணடி | 1,75,66,518 | 2,15,72, 353 |
| ஆரஜிதம | 47,32,765 | 53,36, 770 |
| சிறப்பு நுழைவு தரிசனம | 1,18,200 | 1,36,524 |
| அனனதானம் (பொதுமககள நனகொடை) | 1,59,000 | 1,92,000 |
| கலயாண கடடா (தலைமுடி காணிககை) | 1,34,000 | 1,70,202 |

டது. 'கருடசேவை' நிகழச சியினை சுமார 95,000 யாத திரிகப பொதுமகக்ள கணடு களிததனர. நாள ஒன்றிறகு சுமார முபபதாயிரம பகதரக ளுககு இலவச உணவு வழஙகப பட்டது. கடப்பா வானொலி நிலையம, சென்னை ஹைத ராபாத் தொலைககாட்சிநிலை யஙகள, மறறும தனியார தொலைககாட்சி நிலையததின ரும் இபபிரமமோதஸவ நிகழசசி களை நேரிடையாகவும் அடுத்த டுதத நாடகளின போதும ஒலி-ஒளிபரபபினர.

### திருமலையில் ஆந்திர முதல்வர்

ஆநதிர மாநிலததின் முதல மைசசர் திரு. என. சநதிரபாபு நாயுடு அவரகள் 30-9-95 அன்று திருமலைககு வருகை புரிந்து அரசு சாரபில் 'படடுததுணி களை' உதஸவரககு அளிதது அன்று நடைபெறற 'கருட சேவை' நிகழசசியில கலநது கொணடார். அடுத்தநாள காலை 'வைகுணடம' க்யூ கட டிடம் வழியாக (பொதுவழி கோயிலுககுசசென்று இறைவ னைத தரிசிததார. பின்





னர், அப்போது நடைபெற்ற வந்த பிரமமோதஸவ ஏற்பாடு களைப பாரவையிட்டார. திருமலையில, தான் தங்கியிருநத போது, திருமலையில கணிப பொறி மூலம் இடவசதிகளை ஒதுககப்படும திட்டததினைத துவககி வைததார். பின்னர தி.தி. தேவஸதான ஒளிபப திவுத் துறையினரால் வெளிக கொணரப்பட்ட 'பிரம்மோத்ஸவ ஒளிபபேழை'யினை வெளியிட் டார். பினனர் ஒரு கோடி ரூபாய செலவில் கட்டப்பட்ட 'காவேரி' தர்ம சத்திர கட டிடப பிரிவினைத் திறந்து வைத்தார். தனது இரண்டு நாள் பயணத்தை முடித்துக் கொண்டு திருமபுகையில் திருப் பதியில ரூ. 3.6 கோடி செல வில் கடடபபட்ட 'ஸ்ரீபாலாஜி உடல் ஊனமுறறோர மறறும மறுவாழவு' மருததுவக கடடி டததினைத் திறநது வைத தார்.

* * *

## திருமலையில் குடியரசுத்தலைவர்

இநதியக் குடியரசுததலைவர் டாக்டர சங்கரதயாள் சர்மா அவரகள் தனது இரண்டுநாள பயணமாக 8-10-95 அனறு திருமலைககு வருகைபுரிநதார். திருமலையில் தக்க கோயில மரியாதைகளுடன எதிரகொளளப் பட்ட ஜனாதிபதி அவரகள சுப் ரபாதம், அரசசனை போன்ற கோயில நிகழசசிகளில் பஙகேற ரூர. பின்னர 'தர்மகிரி' எனும் தேவஸதான வேதபாடசாலையில் பயிறசிபெற்ற மாணவர களுககுச் சான்றிதழ்கள் வழங் கினார. பினனர் திருசசானூர ஸ்ரீபத்மாவதி தாயார் திருக் கோயிலுக்கும வருகைபுரிநது தாயாரின் தரிசனததையும் பெற் ரூர்.

* * *

## தோளணிகள்

பெயர்கூற விரும்பாத பக்தர் ஒருவர் அண்மையில் சுமார் ஒன் றரை கி.கி. எடை பொன்னும், விலையுர்நத கற்களும் பதிக்கப் பெற்ற ரூ. 30 இலடசம் பெறு மான சங்கு, சக்கர தோளணிக ளைத திருமலைக்கோயில் மூல வர்க்கு அனபளிப்பாக வழுங்கி யுள்ளார்.

* * *

## 'சிறந்த ஆசிரியர்' விருது

இவவாண்டு ஆந்திரமாநில அரசினால் சிறந்த ஆசிரியர விருது அளித்துப் பாராட்டப் பெற்ற ஆசிரியர் பெருமக்கள் குழுவில், தி.தி. தேவஸ்தானத் தானத்தைச சாரந்த நான்கு கல்லூரி ஆசிரியர்கள் இடம பெற்றனர. அவர்கள் பின்வரு மாறு: 1) திரு. பி. கிருஷ் ணமூரத்தி செட்டி (வரலாறு) 2) திரு. எம. பாஸ்கர் நாயுடு (தெலுங்கு) 3) திரு. கே. ஸ்ரீநிவாசாசாரயலு (ஆஙகிலம்) 4) திரு. டி. நரசிமமலு (அரசி யல்).

* * *



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதி தாஸன் - காஞ்சிபுரம்.

## மூலம் : 265

"இதுதான அநுவாத கோடியிலே' எனறு வஙகிப புரததுநமபி வாரததை"

1) **இந்தச சுலோகம பகவானாலே விதிக்கப்பட்டது எனபதில நம்பிககை எளிதில ஏற்படுமோ?**

எளிதில் ஏறபடாது. "அறிநதவொரு கருததையே திருபபிச் சொலலுகிறது இநதச சுலோகம்' எனறு சேதனன கருதுவதால இதில் நமபிககை எளிதில ஏறபடாது.

"எலலா உபாயஙகளையும விடடு எனனையே பறறு" எனறு கூறும இநதச் சுலோகததை, அருசசுனனுககுப பெருமான இரணடாம் முறையாக எடுததுக்கூறினான இதனை அருசசுனன முனபே அறிநதிருநதான. எனவே, இது அநுவாத சுலோகம எனபபடும எனறு வஙகிபபுரததுநமபி - எனபவர கூறுகிறார்

## மூலம் : 266

"அர்ஜுனன க்ருஷணனுடைய ஆனைத்தொழிலகளாலும, ரிஷிகள வாக்யஙகளாலும, க்ருஷ்ணன தன காரயததிலே அதிகரிததுக்கொணடு போருகையாலும, 'இவனே நமக்குத தருசம' எனறு துணிநத பினபு தனனைப பறறச சொலலுகை யாலே"

1) **அருசசுனன அறிநததையே கண்ணபிரான் செ[illegible]கிறான் என்பது எவவாறு?**

கண்ணபிரானுடைய அரிய செயலகளையெலலாம அருசசுனன இளமைககாலம முதலே நனகு அறிநதவன எனவே, பெருமானுடைய அருளுசெயலகளைக கணட அருசசுனன கணணபிரானையே தருசமாகப பறறி நின்றான்.

இமமுறையில அருசசுனன அறிநதவறறையே கணணன திருபபிச சொலலுவதாககொணடு, இதை அநுவாதவாககியம எனறு வஙகிபபுரததுநமபி கருதுகிறார.

2) **ஆனைத்தொழிலகள என்றால் எனன?**

கோவரததனததைக குடையாயப பிடிததல, காளியனுடைய ஆயிரம படஙகளில குதிதது, நடிததல, இறந்துபோன குருமகனையும வைகுநதம சென்ற வைதிக புததிரரகளையும மீட்டுககொடுததல முதலிய செயலகள ஆனைததொழிலகள எனப்படும.

மனித சகதிக்கு அபபாறபட்ட செயலகள் (அதிமாநுஷய செயலகள) ஆனைத்தொழிலகள் எனபபடும

3) **ரிஷிகள் வாக்கியங்கள் யாவை?**

கணணபிரானுடைய பெருமையைபபேசிய முனிவரகளின் வாககியஙகள ரிஷிகள வாககியஙகள எனபபடும. அவையாவன

திருமாலே தன பாம்பணையாகிய ஆதிசேஷனைப் பலராமனாக முன்னால அவதரிக்கச செயது, பினனரே தான மதுரை நகரத்திறகு எழுந்தருளினான எனககூறியது.

கணணபிரான எநத இடததில எழுநதருளியிருக்கிறானோ, அநத இடததிலேயே எலலா உலகஙகளும, எலலாத தீரததஙகளும, எலலாத் தேவாலயஙகளும இருக்கினறன எனககூறியது.

கணணபிரானே பவிததிரஙகளுக்கெலலாம பவிததிரமாகவும, புணணியஙகளுக்கெலலாம புணணியமாகவும, மஙகளஙகளுக்கெலலாம மஙகளகரமாகவும் இருக்கினறான எனறு கூறியது.

படைததல, காததல, அழிததல ஆகிய முததொழிலகளையும ஒருசேரச செயயும விததகன கணணனே! அறிவுடையன, அறிவிலலாதன ஆகிய அனைத்தும கணணனின கருணையால தோன்றியனவே!

இவை போனற செயதிகள் ரிஷிகள வாக்கியஙகள எனப்படும.

4) **கணணபிரானின் செயல்களைக் கணகூடாகக் கண்டவன அருச்சுனன என்பது எவ்வாறு?**

தாஙகள் நாடடில உறைநத போதும, காடடில திரிநதபோதும தஙகளுக்கு ஏறபட்ட துன்

பங்களைத் துடைத்து இன பங்களை ஊட்டும காரியத்தி லேயே கண்ணும் கருததுமாக இருந்து வநததை அருச்சுனன் நேரிலேயே கணடறிந்தான.

எனவேதான, கணணன சொல்லும் மறற உபாயங்கள் தஞ்சமாக! கண்ணன ஒருவனே தஞ்சமாவான் என்பதில அருச சுனன் உறுதியாக இருநதான்.

அருச்சுனன அறிந்த இநதச் செய்திகளையே கணணபிரான் திரும்பத திருமபச் சொனன தால், இநத வாக்கியம் அநு வாத வாக்கியம் என்று வஙகி புரத்து நம்பிகள் கருதினாா.

மூலம் : 267

"புறம்பு பிறந்தது எல்லாம இவன் நெஞசைச சோதிக்கைக காக"

1) இந்தச் சரணகத தருமத்தை அருச்சுனனுக்கு முதலிலேயே சொல்லாமைக்குக் காரணம் யாது?

கணணபிரான அருச்சுனன் மனத்தைச் சோதிப்பதற்காகவே தொடக்கக்காலத்தில் உபதே சிக்காமல முடிவில் உபதேசிதத ருளினான.

கனம ஞான பக்திகளாகிற உபாயங்களுள ஒவவொனறுமே சிறந்த உபாயமெனக் கருதி, அவற்றுள் ஏதாவது ஒனறி லேயே நிலைத்து விடுகின ருனா? அவறறின குறைகளை அறிநது நாமாகிற சிததோபா யத்தைப பற்றி நிறகும் அதி காரி ஆகினரு -? என்பதைச் சோதிததறியவே -ணணபிரான இவவாறு கடைசியாகப் பிர பத்தி தருமத்தை உபதேசித் தருளினார்.

மூலம் : 268

"வேத புருஷன் உபாயாந்தரங களை விதித்தது, கொண்டிப் பசுவுக்குத் தடி கட்டி விடுவா ரைப போலே, அஹங்கார மம காரங்களால் வந்த களிப்பற்று ஸவரூப ஜ்ஞாநம பிறக்கைக் காக."

1) வேதநாயகனான கண்ணபிரான் கன்மஞான பக்தி நெறிகளை விதித்தது எதற்காக?

ஒருவருக்கும் அடங்காமல் தன் னிச்சையாகத திரியும் பட்டிப பசுவைத் தம வசப்படுததற்கு அதன் கழுததில தடி கட்டி விடுவாரைப் போல, அகஙகார மமகாரங்களால் தன்னிச்சையா கச் செருக்கித் திரியும் சாமா ன்ய மனிதனுக்கு, அதை நீக் கிச் சொரூப ஞானத்தைப் பிறப் பித்து அவனை நலவழிபபடுத் தறகாகவே வேதநாயகன உபா யாந்தரங்களை உபதேசித்தருளி னான.

அகஙகார மமகா ரஙகள் ஒழிநது உணமையான சொரூப ஞானம பிறக்க வேண டும் எனபதறகாகவே கண ணபிரான கன்ம ஞான பக்தி நெறிகளை விதிததருளினான.

மூலம் : 269

"ஸநயாசி முனபுளளவறறை விடுமாப்போலே, இவவளவு பிறநதவன் இவறறைவிடடால குறறம வாராது."

1) சொரூப ஞானம ஏற்படுதறகுக் காரணமாயிருக்கும் இவற்றை விடுதல குற்றமாகாதா? - விளக்குக.

துறவு நிலையை அடைநத சந்நியாசி ஒருவன முனபிருந்த மற்றைய நிலைகளில் தான கடைப்பிடித்தொழுகிய அறங் களை அறவே விட்டுவிடுவான

அதுபோலவே, மற்றைய தருமங்களை மேற்கொள்ளுதல் தன் அத்தியந்த பாரதந்திரிய நிலைக்குச் சேராது என்றும், பெருமானைப் பற்றுதலே தன நிலைக்கு ஏற்றதென்றும் கரு தக்கூடிய இத்துணை உயரிய ஞானம பிறந்தவன், கன்மஞான பக்திகளாகிற உபாயாந்தரங் களை விட்டுவிடுதல குற்றமா காது.

மூலம் : 270

"இவனதான், இவை தன்னை நேராக விட்டிலன்".

1) பெருமானைப் பற்றும் ஞானம் பிறந்து காணப்படுபவன் இத் தருமங்களை அறவே விட்டு விடுவானா?

மறறைய தருமஙகளை விட்டு விடடுப பெருமானையே பற்றும சீரிய ஞானம் கைவரபபெற றவன கன்மஞான பக்திகளை அறவே விட்டு விடமாட்டான்.

மூலம் : 271

"(1) கரமம - கைஙகரியத்திலே புகும; (2) ஜ்ஞாநம் - ஸ்வரூப பரகாசததிலே புகும்; (3) பக்தி - ப்ராபய ருசியிலேயே புகும்; (4) ப்ரபத்தி - ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானத்திலே புகும."

1) பிரபன்னன் செயயும கன்மங்கள் எதனுள் அடங்கும்?

பிரபனனன் தன் நிலைக்கு ஏறப, சாதன புத்தியைவிட்டுப் பிறர நனமையின பொருட்டே செயயும் கன்மங்கள் கைங்கர் யத்துள அடங்கும்.

2) ஞானம் எதற்குள் அடங்கும்?

ஞான யோகததை ஆழ்வார நுணணறிவு என்று அருளிச செயதுள்ளார். இநத ஞானம, சேதனன, தன அடிமைத தன்மையை அறிந்து, பினபு பெருமானுடைய தலைமைத தன்மையைக் கணகூடாகக காண்கைக்குக் காரணமாகும. ஆனால, பிரபன்னனோ இந்த ஞானம அதறகுககாரணம் என்று நினைகக மாட்டான.

இந்த ஞானம் சேதனனுடைய அடிமைத தனமையை ஒளிரச செய்யும். எனவே, இது சொரூப ஞானத்துள அடஙகும்.

3) பக்தி எதனுள் அடங்கும்?

மிக உயரந்த பொருளில தாழ்நதவன் செலுத்தும் அன்பு பக்தி எனபபடும். பெருமானை அடைவதறகுச சிறநத ஏதுவாக உளளது பகதியே எனறு வேதாந்தஙகள விரிததுககூறுகின்றன.

இநதப் பக்தியைப பிரபன்னன தன் உய்வுக்குச் சாதனம் எனறு கருதி மேறகொளள மாட்டான. எனவே, இது உணவுக்கு முன ஏறபடும பசியைப போன்று, கைஙகரயத்துக்கு முன் ஏற்படும வேடகையில் அடங்கும்.

4) பிரபத்தி எதனுள் அடங்கும்?

பெருமானையே உபாயமாகப் பற்றும் இநதப் பிரபததி (சரணாகதி) உபாயத்துவ புததி நீஙகியவுடன், பெருமான் ஒருவனுக்கே தான் அடிமை என்னும் தன் ஆன்மாவின உண்மைச் சொரூபத்தை உணரும் உயர்நத ஞானத்தில இநதப் பிரபததி அடஙகும்.

5) இம்மூலத்துள் அமைநதுள்ள பொருட்சிறப்பை விளக்குக.

ஞான யோகததால் தன அடிமைத தனமையை அறிநது, பிரபததி யோகததில பெருமானே உபாயம என்று உறுதி பெறறவன, பகதி யோகததாலே வேட்கை தலையெடுத்துக் கனம யோகத்தாலே பகவத் கைஙகரியததில தொடர்புற்று இன்பத்தைத் துய்ப்பன் எனறு இமமூலததில உலகாசிரியர் சுவைபடக்கூறுகிறார.

(தொடரும்)

★★★★★★★★★★★★

## நவராத்ரி

வருஷததில நானகு நவராதரிகள உணடு. ஆனிமாத அமாவைசைககுபபிறகு வரும ஒனபது நாட்களும 'ஆஷாட நவராத்ரி' எனனும் புரட்டாசி அமாவாசைககு பிறகு வரும ஒனபது நாடகளும, சாரதா நவராதரி' அலலது 'மகா நவராதரி' எனறும, தை மாதத்து அமாவாசைககுப பிறகு வரும ஒன்பது நாடகள 'மாக' நவராதரி எனறும, பங்குனி மாததது அமாவாசைககுப் பிறகு வரும ஒன்பது நாட்களும் 'வஸநத நவராதரி' எனறும வழங்குவதாக தேவிபாகவதம் எனறும நூல விவரிககினறது.

இது தவிர 'வனய நவராதரி' எனறும ஒனறு உணடு. இது கநத மூலிகைகளைக் கொணடு கானகததில செய்வதாகும. இதைப பறறி ஸ்ரீராம சரிததிரத்தில் கூறபபட்டுளளது.

நிதயம செயயவேண்டிய 5 மகா யக்ஞஙகள இருககினறன. அவை 1) தேவயகஞம 2) பிதரு யகஞம 3) பூதயகஞம 4) மனுஷய யகஞம 5) பிரமம யகஞம எனபவை.

தேவயகஞம : தேவர்களை உததேசிதது அக்னியில ஹோமம் செயவது. அது. அகனி ஹோதரமாகவும், ஔபாசனமாகவும், சரௌத கரமாவாகவும, ஸ்மாரத்த கசமாவும் ஆக எது இருநதாலும், பிரதிதினம அவசியம செயயவேணடும.

பித்ரு யக்ஞம : பித்ருகளை உத்தேசிதது, சிராரததம, தர்பபணம் போனறன செயவது.

பூத யக்ஞம் : உலகில உளள சகல ஜநதுககளையும மனததால் உததேசித்து யதாசகதி மநதரபூரவமாக சமரபபிககும போது ஆகாரம்.

மனுஷ்ய யகஞம் : அதிதிகளுககு அனனமிடுவது.

பிரமம யகஞம : தனனுடைய வேதததில் ஒரு பிரசசனமோ, பஞசாதியோ அலலது ஒருவருககாவது பிரதிதினம அதயயனமசெயவது, தரபபணம செயவது அலலது பகதி ச்ரததையுடன காயதரீ ஹோமததையோ அலலது ஜபததையோ மனததிறகுள செயவது ஆகும.

தகவல: என்.ஸி. கோபாலன் - சென்னை.

# கீதை என்ன சொல்கிறது?

கவிஞர் எம்.பி. ஸ்ரீதர் ஜெயமுருகன் * அரகண்டநல்லூர்

உலகில் உள்ள அனைத்து மதத்திற்கும் புனித நூல் என்பது மிகவும் தேவையான ஒன்று. மதம் உருமாறி போகாமலிருப்பதற்கும், உலக வழக்கத்திலிருந்து மறைந்து போகாமலிருப்பதற்கும் இந்நூல் துணையாக இருக்கிறது. எந்த மதத்திற்கு புனித நூல் இல்லையோ, அந்த மதம் காலச் சக்கரத்தில் சிக்கிச் சிதைந்து மிக விரைவில் சொந்த முகத்தை இழந்து நிலையற்றதாக அழிந்து போகிறது. ஆனால் ஒரு நூலைத் தன்பயணப் பாதையாக கொண்ட மதம் வரலாற்று சூறாவளிக்கும் அரசியல் எதிர்ப்புக்களுக்கும், வேற்று மதத்தினரின் தாக்குதலுக்கும் ஈடு கொடுத்து என்றும் நிலைத்து நிற்கும். இன்றைய நிலையில் மக்களின் அன்றாட வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்து நடைமுறையில் இருக்கும் அனைத்து மதங்களுக்கும் புனித நூல்கள் உள்ளன.

கிறிஸ்துவ மதத்திற்கு புனித நூல் எது தெரியுமா? என்று கேட்டால் "விவிலியம்" அல்லது "பைபிள்" என கிறிஸ்தவனல்லாதவனும் பதில் சொல்வான். அதைப் போலவே இஸ்லாமிய மதத்திற்கு "கூர்-ஆன்" என்றும், பௌத்த மதத்திற்கு "தம்பதம்" என்றும், ஜெயின மதத்திற்கு "ஸ்ரீபுராணம்" என்றும் எல்லோருக்கும் தெரியும்.

ஆனால் ஹிந்துக்களிடம் "உங்கள் மதத்தின் புனித நூல் எது?" என்று கேட்டால் அவர்கள், அதாவது நாம் ஒரே விதமான பதிலை சொல்லமாட்டோம். நமக்கு எது பிடித்தமானதோ அந்த நூலையே சொல்வோம். நம்மவர்களில் சற்று கற்றறிந்தவர்களைக் கேட்டால் எதைச் சொல்வது, எதை விடுவது என்று விழிப்பார்கள். ஏனென்றால், நமது ஹிந்து மதத்திற்கு கணக்கற்ற "புனித நூல்கள்" இருக்கின்றன. திருவாசகம் முதல் மீரா பஜனை வரை எல்லாமே நமக்குப் புனிதமானவைகள்தாம்.

பொதுவாக எல்லா புனித நூல்களுக்கும், வேதமே முதற் காரணம் என்று போற்றத்தக்க ரிஷிகளும், ஞானிகளும் திருவாய் மலர்ந்தருளி உள்ளனர். வேதங்களில் பலப்பல பகுதிகள் இன்று நமக்கு கிடைக்காமல் மறைந்தொழிந்தன. ஆனால் வேதங்களிலிருந்து அமிர்தமான பிழிந்து எடுக்கப்பட்ட "உபநிஷதங்கள்" நமக்குப் பேணிப் பாதுகாக்கப்பட்டு கிடைக்கின்றன. உலகில் உண்மையானதும், நிலையானதும் எது என்கின்ற மெய்ப்பொருள் ஆராய்ச்சியில் உபநிஷதங்களின் போக்கு எத்தகையது என்று விமரசன ரீதியில் சொல்வது "பிரம்ம சூத்திரம்". இதற்கு "வேதாந்த சூத்திரம்" என்ற வேறொரு பெயரும் உண்டு. உபநிஷதங்களில் பொதிந்துகிடக்கும் கணக்கற்ற கருத்து மணிகளை ஒவ்வொன்றாக எடுத்து விளக்கம் தருவது "ஸ்ரீமத் பகவத் கீதை"

உபநிஷதங்களைப் பசிப்பிணி போக்கும் ஆவினங்கள் எனக் கொண்டால் "ஆவின்பால்" "பகவத்கீதை" என்று கூறலாம். பாலை வாங்கி நுகர்வோர்கள் பசுவை வளர்க்கும் சிரமத்தைப் பெற வேண்டியதில்லை. அதைப்போல் தத்துவ ஞானிகளும், பண்டிதர்களும் புகுந்து மீளமுடியாமல் தத்தளிக்கும் உபநிஷ சாகரத்திற்குள் மூழ்காமல் 'பகவத் கீதை' எனும் கப்பலில் ஏறி சென்று பிரம்மரகஸியத்தை எளிதில் உணரலாம்.

உபநிஷதங்கள், பிரம்மசூத்திரம், பகவதகீதை என்று இம்மூன்று புனித நூல்களையும் ஒன்றாக இணைத்து "பிரஸ்தானத்திரயம்" என்று அழைக்கப்படுகிறது. முடிவான பிரமாணமாக அமைந்த மூன்று நூல்கள் என்பது இதன் பொருள். இந்த மூன்றினுக்குள் ஒன்றுக்கொன்று கருத்து வேறுபாடுகள் கிடையாது. மூன்றும் வெவ்வேறு வார்த்தை பிரயோகங்களில், மாறுபட்ட உதாரண உருவகங்களில் ஒரே கருத்தை ஆணித்தரமாக எடுத்துரைக்கின்றன. தத்துவ விளக்கம் அல்லது மெய்ப்பொருள் கோட்பாடுகள் இவைகளுக்குள் வேறுபடுவது கிடையாது.

இவைகளில் அடங்காத எவ்விதமான தத்துவ கோட்பாடுகளும் இல்லையென உறுதி கூறலாம். மற்ற தத்துவ நூல்களில் அல்லது புனித நூல்

களில் சொலலியுளள கோட பாடுகள பிரஸதானததிரயத தில் அமைநதுளள கோட்பாடுக ளுககு விளககமாக வநது அமை யலாம - அமைய வேணடும. மாருக எதிரமறையாக இருககு மேயானால முரணபடுகிற மறற "புனித நுலகள்" புறக்கணிக்கப்ப டுவது நம நாடடில தொன்று தொடடு நடைமுறையில உளள வழககமாகும. ஆகவே, ஹிநது மதததின புனித நூல் எது? எனறு கேடடால "பிரஸதானத திரயம்" எனறே கூறவேணடும.

நாம் இநத கடடுரையில பிரஸதானததிரயததில ஸ்ரீமதப கவத கீதையைப பறறி மட டும் சிறிது விளக்கமாக பாரக கபபோகிறேம்.

'ஸ்ரீமத பகவத கீதை' "மகா பாரதம்" எனனும ஈடு இணை யறற இதிகாசத்தில பீஷ்ம பரவதம 25ஆவது அதிகாரத திலிருநது 42ஆவது அதிகாரம வரை 18 அததியாயஙகளாக அடங்கி உளளது. பகவான ஸ்ரீகிருஷணன, பார்ததனுக்கும, பார்ததனைப போனறு பக் குவபபடட ஜீவாதமாககளுக்கும ஒபபறற உபதேசமாக வழங கியுளள இநநூல 700 சுலோ கஙகளைக் கொணடது. இதி லுளள 18 அததியாயஙகளும அரஜுன விஷாத யோகம, ஸாஙகிய யோகம, கர்ம யோகம, ஞானகரம ஸந்யாஸ யோகம, ஸந்யாஸ யோகம, தியான யோகம, ஞானவிக ஞான யோகம, அக்ஷரபரஹம யோகம, ராஜ விதயா ராஜ குஹய யோகம, விபூதி யோகம, விசவரூபதரசன யோகம, பக் தியோகம், க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம, குணத்ரய விபாக யோகம, புருஷோத்தம யோகம, தெயவாஸுர ஸம பத் விபாகயோகம, சிரததாதரய விபாகயோகம, மோக்ஷ ஸந யாஸ யோகம என்று பதி னெட்டு யோகஙகளாக விவ ரிதது சொலலபபட்டிருப்பது மிக விசேஷமானது தலை நகருககுச செலல பல வழி கள இருபபதைபபோல பரமாத் மாவை அடைய 18 யோக வழி கள கர்டடபபடடுளளன.

உலகிலேயே முதனமுதலாக ஆங்கிலததில மொழிபெயர்க கப்பட்ட சமஸகிருத இலககியம பகவத கீதையே ஆகும்.

ஆஙகிலததில மட்டுமலலாது கிரேக்கமொழி, லததீன் மொழி, இத்தாலிய மொழி, பிரெஞ சுமொழி, ஜெர்மன மொழி போனற ஐரோபபிய மொழிக ளில மட்டுமலலாது ருஷ்ய - அரேபிய மொழிகளிலும் கீதை பெயரததெழுதபபட்டுள்ளது.

அநநிய நாடுக ளிலகூட கீதைககு இததகைய வரவேறபும, மரியாதையும என ருல நம பாரத நாடடில இதற குளள பெருமையைப் பறறி நாம வியபபடைய வேணடிய அவசி யம் இலலை. நம நாட்டிலுளள அனைதது மொழிகளிலும நாம் காணலாம. "பட்டனாரகீதை", "கீதாரத்த சஙகிரகம்", "பகவத கீதை வெணபா" போனறவை தமிழில உள்ள மிகபபழமை யான மொழி பெயர்பபுக்களா கும.

கீதையை ஒரு கடவுள தன மையுள்ள நூலாக போறறி வணங்குவோரும சரி, அதை எதிர்த்து அனர்ததன வியாககி யானம செயவோரும சரி அதன எழிலமிக்க எளிய நடையையும, தூயமைமிக்க பொருள ஆழத தையும கணடு வியபபடைவ தைக் காணலாம.

கிறிஸ்துவ சமுதாயத்தைச் சேர்ந்த மேலநாட்டு பாதிரிக ளும கூட கீதையில் கவரப் படடுள்ளாரகள் என்பது கீதை யின் சிறபபுககு ஒரு சீரிய சானறு. ஆகஸபோர்டு கிறிஸ் துவ மடாலயத்தைச சேரந்த ரெவண்டு ஜே.என. பரககு ஹார் என்பவர 'கீதையும் கிறிஸ் துவ வேதமும்' எனனும தமது நூலில, உலகிலுள்ள எலலா இலக்கியஙகளுககுள்ளேயும் பக வத் கீதையோடு ஒப்பிடக்கூடி யவை ஒரு சிலவே இருக் கினறன. ஒரு புதுமையான கவிதை. அழகுவாய்நத தத்துவ நூல அது" என்று குறிப்பிட் டுளளார்.

இபபடி அனைவராலும் ஒரு மனதாகப் போறறிப் புகழப்ப டும கீதையில் அப்படி என் னதான் இருக்கிறது? அதில் விசேஷமாக மற்ற நூலகளில் இல்லாதது எது சொல்லப்பட் டிருக்கிறது? எனபதைச சிறித ளவேனும இந்தக் கட்டுரையில் பாரபபோம.

ஸ்ரீமத் பகவத் கீதை எந்த சநதரபபததில உபதேசிக்கப்பட் டது எனபதை நம்மில் பலர் மிக நனருக அறிவோம். கீதை யின சிறபபே அது உபதே சிக்கபபடட சூழநிலையிலும், சநதர்பபத்திலுமதான் இருக்கி றது. உலகிலேயே சமர்க்க ளத்தில உபதேசிக்கபபடட ஒரே "புனித நூல்" கீதைக்கு மட்டும் தான பொருநதும.

மகாபாரதபபோரில கௌரவர களை எதிரதது போர்புரிய வந்த அர்ஜுனன் எதிர்தரப்பில நினற தனது உறறூர் உறவினர் களையும, நணபர்களையும், எல லாவறறிறகும மேலாக தன அறிவுக் கணணைத திறந்து

வைத்து புஜபல பராக்கிர மததை பனமடஙகு உயரத தப்பல பயிற்சிகளை சொலலித தந்த குருமாரகளையும் கணடு, இவரகளை எலலாம கொல்ல வேணடிய துர்பாககிய நிலை தனக்கு வநதிருக்கிறதே எனறு மனம கலஙகிந தயங்குகிறுன. அநத நிலையில அவனுககுத துக்கம் மேலிடுகிறது. கலக் கம் அடைகிறுன. அநத துக்கத்தைப் போக்கிக் கலககத தைத தெளியவைக்க வநததே ஸ்ரீகிருஷ்ணனின் கீதோபதேசம.

அர்ஜுனனுக்கு ஏறபடடது போன்றே துக்கமும், கலகக மும் மனிதப்பிறவி எடுதத நம எல்லோருக்கும ஏற்படக்கூடிய வையே. சந்தரப்பமும, ஏற்படும விதங்களும் வேறுவேருக வந் தமையலாம்.

துக்கம்தான தததுவ போத னைக்கும் தததுவ வேட்கைக் கும் நிலைக்களனாக அமை யும். வணங்குதலுக்குரியவர்க ளையும் அனபிற்குரியவர்களை யும் கொலை செய்யவேணடி யதிருக்கிறதே எனற எணணம் அர்ஜுனனுக்குத் தோனறி துக் கத்தை மூட்டியது.

அந்தத் துக்கமே ப்ரபஞ்சத தைப் பறறிய ஆராயசசிக்கு மூல விததாக அமைநதது. தன மதிப்பிற்குரியவர்களைக் கொல லப்போகிறேமே எனற எண ணம் அர்ஜுனனின துக்கம. மதிப்பிறகு பாத்திரமானவரகள யார? மதிபபிறகு பாததிரமா னவர் என்று கருதும பட சததில் நாம் அவரகளது உட லைக் குறிபபிடுகிறேமா? அல லது உயிரையா? இதததகைய தத்துவ வினாக்களோடு ஆரம பமாகிறது பகவத் கீதை

நாமும பலதரப்பட்டவர்கள் மீது மதிப்பு வைத்திருக்கிறேம். அவர்களை எதிர்க்கவோ அல் லது இழக்கவோ நேரிடும போது துககம் அடைகிறேம். அதைப்போலவே பலப் பொருட கள மீதும் மதிபபை வைததி ருககிறேம். அவறறையும இழக கும்போதும் துக்கப்படுகிறேம.

நாம் துனபத்தைத தவிர்தது இன்பமாக வாழவேணடுமா னால் நாம பறறுக்குக கார ணமாய் உளள பொருட்க ளின உண்மையியல்பை ஆராய வேணடுமாம.

“போரிலே உன்னால் அழியப போகும் உடலைப பற்றி துக் கபபடுகிருயா அலலது உயி ரைப பறறி துக்கப்படுகிருயா?” எனறு கணணன கேடகிறுன.

“உடல், நீ அழிக்காவிட்டா லும, எப்படியும அழியபபோ வது - அழியபபோகும் உடலுக் காக வருததமடைய் அவசியம இலலை. உயிருககாக எனருல் உயிர எனறும அழியாதது. அதனை யாராலும் அழிக்க முடியாது” எனறு ஆத்மாவைப பறறிய மிக முக்கியமான லக்ஷ ணம ஒனறை கணணன பார்த தனுககுச சொலலத தொடஙகு கிறுன.

“ஒருவன, நான கொலலுகி றேன என எணணுவதும நான் கொலலபபடுகிறேன என எண ணுவதும அறியாமை. ஆத்மா கொலலுவதும இலலை. கொல லப்படுவதும இலலை.”

“ஆதமா பிறபபதுமிலலை, இறபபதுமிலலை, இலலாமல இருந்து, புதியதாகத் தோன றுவதிலலை, பிறப்பறற அந் தப பொருள மரணம அடை வதிலலை கொலலபபடுவது உடலே அதுவலல.”

“நைந்துபோன ஆடைகளைத் தள்ளிவிட்டு, புது ஆடைகளை அணிவதுபோல் உயிர் உடலை களைந்துவிடடுப் புது உடலை பூணுகிறது”.

இவை ஆதமாவை பற்றி கண ணன கூறிய அமுதமொழிகள்.

அழியும் இந்த உடலுக்குள் ஊடாக அழியாத ஒரு பொருள் நிலைத்து நிறகிறது. அதுவே ஆதமா எனக் கூறுவது இங்கு கவனிக்கத்தக்கது. அரசன முதல் ஆணடி வரை அனைவ ருக்கும உள்ள மரண பயததை, மரணம் எனபது என்ன என்ற உண்மை நிலையைக் கூறி விளக்கி வைக்கிறுன் பகவான் ஸ்ரீகண்ணன. மரண பயததை ஒருவன வெனறுவிடடான் என் ருல் அவன் வாழ்வின் துகக ஸாகரத்தை பாதி கடந்து விட டான எனறு அர்த்தம். துக் கததை வெலவதுதான மனித வாழ்வின் லக்ஷியம்.

பகவத்கீதை நெடுகிலும் துக் கம, துக்க நிவாரணம, துகக உறபத்தி, துக்க நிவாரண மார்க்கம எனற நான்கு விஷ யங்களைப் பறறி மிக விரிவா கப் பேசபபடடிருபபதைக் காண லாம். இநத நானகைப பறறியே பௌத்தமதமும பேசு கிறது. ஆனால பகவத்கீதை காலததால புததருக்கு முறபட் டது எனபதை இஙகுக் குறிப பிடவேணடும.

அர்ஜுனனுக்கு ஏறபடடது ஒருவித துக்கம் அவன நாடி யது அநத துனபததிறகு நிவா ரணம. அபபோது அவனுக்கு உறற நணபனாகவும, சாரதியா கவும இருந்த பாரததசாரதி துக்கம எதிலிருந்து உற்பத்தி ஆகிறது என்பதையும் அந்த துக்கத்திறகு நிவாரண மார்க்

கம எது எனபதையும விளககு கிறான. பகவான் அன்று கூறிய விளககம இனறைய விஞ்ஞான உலகில நம அனைவருககும பயனதரககூடியது.

அனைத்து வகையான துக கஙகளுக்கும காரணம் பறறு அல்லது ஆசைதான. நம ஒவவொருவருககும ஒவவொருவி தமான பறறுககள உணடு. ஒரு வருககு பெண்ணினமீதும், மற றொருவருககு பணததின மீதும, பதவியின மீதும அலாதியான பறறு உண்டு. தான பற்று வைதத பொருளைத தனககு கிடைக்காத போது அலலது கைக்கு எட்டியது வாயக்கு எட டாமல போகும போது ஏமாற றமும், துக்கமும் ஏற்படுகிறது.

"பற்றை, அதாவது ஆசையை நீககுவதே துககத்தைப போக குவதற்கு வழி" என ஸ்ரீகண ணன உபதேசிககிறான. உபதே சததோடு நிலலாமல ஆசையை விடடகற்ற வழிவகைககளையும பகவானே கூறுகிறான.

எநதவொரு செயலிலோ பொருளிலோ சிறுதளவேனும் பறறிலலாதவர்கள நமமிடையே ஒருவராவது இருபபது அரி திலும அரிது. அபப டியே யாராவது இருககிறார கள எனறு வாததததிறகாக ஏற றுககொணடாலகூட தாம செய யும செயலின் பலனகளில பற றிலலாமல எவருமே இருகக இயலாது. திட்டமிட்டு இரவு, பகல பாராது கண விழிதது அருமபாடுபட்டு செய யும செயலகளின பலனகளில எளமுனை அளவேனும் பறறில லாமல யாரால இருககமுடியும.

ஆனால இதைத்தான கீதா சிரியன அரஜுனனுக்கு உபதே சிக்கிறான. "கடமையைச செய். ஆனால அதன் பலனில பறறு வைக்காதே" என்பதே பகவா னுடைய உபதேசம. பலனை விருமபாமல செயயும் செயல 'நிஷ்காமிய கரமம' எனப்படும. பகவதகீதை முழுவதும் திரும் பததிருமபக் கூறபபடுவது இநத 'நிஷ்காமிய கரமமே' ஆகும. போர முனைககுப போர்புரிய வநதவன சணடையிடுவதையும், எதிரிகளை அழிப்பதையும கட மையாகச் செய்ய வேணடுமே அல்லாது போரின விளைவுக ளைப் பற்றி கருதலாகாது என பதே கண்ணனின கருத்து.

"உனனுடைய உரிமை காரி யம் மட்டுமே. காரியததின் முடி வும் பலனும உன உரிமையலல. பலனில் ஆசை செலுததி எதை யும செய்யாதே. இபபடி சொன னேன் எனபதறகாக எதையும செயயாமல சோமபி இருநதுவி டாதே. பறறு வைத்துக்கொள ளாமல பகையை அகறறிச செய வதை செய. காரியததின வெறறியும தோலவியும ஒன றாகக கருதிசசெய. இநத சமநிலைககே 'யோகம்' என்று பெயர். செயயும செயலில பலனுககு ஆசைப்படாமல நடு நிலையோடு வாழ்ககை நடத தும் அறிஞரகள பிறவிததளை யிலிருநது விடுபட்டு உயரநி லையை அடைவார்கள்'. இவை ஸ்ரீகிருஷ்ணனின நிஷ்ய வாரத தைகள.

ஸ்ரீமத பகவதகீதையில 'யோகம, துறவு, சநநியாசம தியாகம, வேள்வி ஆகியவை யாவும ஒரே கருததில பேசபபடு வதை இஙகுக குறிபபிட வேண டும. துறவு, சநநியாசம என பது தாடியும மீசையும வளரத துக்கொணடு அடரந்த காட்டிற குள சென்று யார கணணிலும படாமல மறைநது வாழுவதலல. வாழ்க்கையை துறநது விடு வது துறவு ஆகாது. எது உண்மையான துறவு எனபதை கீதை காட்டுகிறது. செய யும் செயலில பலன மீது வைத்திருக்கும பறறை விடு வதே உணமையான துற வும், உணமையான தியாகமும ஆகும. அதைப போனறே வேளவி அலலது யாகம என பது ஞான அகனியில அறி யாமையும, ஆசையையும் எரிப் பதே எனக கீதை விளக்குகிறது.

செயயும் செயலின பலனைச சிறிதும் விரும்பக கூடாது என ஸ்ரீமத பகவதகீதை கூறு வது மிகக கடினமானதாகவும், நடைமுறைக்கு ஒவவாததாகவும தோனறலாம். ஆனால கீதாசா ரியன கூறுவதை மிக ஆழமாக பாரகக வேண்டும.

பலன்மீது பறறு வைக்கக் கூடாது எனுமபோது, குறிப் பிடட செயலால நமககு என்ன பயன? எனக் குறுகிய கண ணோட்டததில பாரககக்கூடாது எனறே கொளள வேணடும. நமது செயலால பிறருககோ அல்லது சமுதாயததிறகோ ஏற படக்கூடிய பலனகளைக் கூட கருதலாகாது எனபதும கருத தலல

நாம நமது சுயநலததைவிட சமுதாய நலனையே முக்கியமா கக கொணடு செயலபட வேண டும எனபதே கீதா வாசகத தின உடபொருள். இதை 'சுயந லக் கருததும, சுயநலபபறறும அறவே துறந்து கடமைகளை செயதுகொணடு போவது அவ சியம. யோகி சமுதாய நல னுககாக பறறையொழிதது எல லாக காரியஙகளையும் செய்து கொணடு போவான" என கண ணபெருமான கூறுவதிலிருநது அறியலாம.

இதுவரை துயரஙகளுக்குக் காரணம பற்று. பற்றுகளை நீக குவதே துக்கததை வெல்ல வழி யாகும என்றும பறறு எனும போது சுயநலப்பறறே ஒழிககப் படவேண்டியது எனறும பக வத்கீதை கூறுவதைப் பார்த தோம்.

சாஸவதம் அற்ற பலன் களின மீது கருமேகமெனச் சூழும் பற்றை விலக்குவதற்கு ஸ்ரீகிருஷ்ணன் வேறொரு வழி யைக காட்டுகிறுன். இங்கு தான் கீதோபதேசத்தின் சிக ரத்தைக் காணகிறோம். பகவான தனமீது பற்று வைககும்படியும், செய்யும் கர்மததின் பயன் அனைத்தையும் தனக்கு அர்ப் பணித்து விடும்படியும கூறுகி றுன்.

"பற்றுக பற்றற்றுன் பற்றினை
யப்பற்றை
பற்றுக பற்று விடற்கு"

என திருவள்ளுவரும் கூறுவதும் இதுவே.

இவவாறு தனனிடம் பகதி வைத்து அனபு செலுத்துமாறு அர்ஜுனனுககு உபதேசிதத பக வான, அத்தகைய பரேமைககு தான் எநதவிதததில் தகுதியான வன் என்பதை சாட்சிபூர்வமாக விளக்கத தன விஸ்வரூபததைக் காட்டித தான் எஙகும் நிறைந தவன என்றும, அனைததிற்கும் மூலமானவன் என்றும், அனைத திலும் இயங்குவதும், அனைத் தையும் இயக்குவதும் தான எனறும் நிரூபிக்கிறுன.

அர்ஜுனனுக்கு ஏற்பட்ட துன்பததைக் கார ணமாகக் கொண்டு, ஜீவாத்மா வின் இயல்பை ஆராய்வதில தொடங்கி, ஜீவாத்மாககளின் துக்கங்களுக்குக காரணத்தை யும், அவற்றை விலக்கும் வழிவ கைகளையும் குறிப்பிட்டு, அந்த ஜீவாதமாக்கள சென்று சேர வேண்டிய பரமாதமாவின லக்ஷ் ணங்களைப் பறபல சுலோகங களில பற்பல விதமான உதா ரணஙகளின் மூலமாக எடுத்து விளககியதோடு பகுக்குவப்பட்ட ஆத்மாவாகிய அர்ஜுனனுக் கும், அவனைப்போன்ற மற்ற வர்களுக்கும், துக்கக் கடலைக் கடககும் தோணியாக ஸ்ரீமத் பகவத்கீதை திகழ்கிறது.



## பரந்தாமனின் சயனத்திருக்கோலங்கள்

மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும் இவ்
வையந் தன்னொடும் கூடுவதில்லையான்
ஐயனே அரங்கா என்றழைக்கின்றேன்
மையல் கொண்டொழிநதே னெனறன்மாலுக்கே

-குலசேகர் ஆழ்வார்

ஐயன் அரங்கனின் சயனத் திருக்கோலங்களில பலவேறு திருததலங்களில் உள்ள காட்சிகள் எட்டுவகையான சயனத்தி ருககோலங்கள்:

1. உத்தான சயனம் : திருக்குடந்தை
2. தர்ப்ப சயனம : திருபபுலலாணி
3. தல சயனம் : மாமலலபுரம்
4. புஜங்க சயனம் : திருவரங்கம்-திருஅன்பில, திரு ஆதனூர், திருவள்ளூர், திருக்கரம்பனூர, திருக் கவித் தலம், திருக்கோட்டியூர, திருககோளூர், திருச்சிறுபுலியூர், திருததெறறியமபலம், திருபபாறகடல, திருவெஃகா திரிப்பிரிதி, திருவட்டாறு, திருவெள்ளியஙகுடி.
5. போக சயனம் : திருசித்ரகூடம்
6. மாணிக்க சயனம் : திருநீரமலை
7. வடபத்ர சயனம் : ஸ்ரீவில்லிபுததூர
8. வீர சயனம் : திருஇந்தளூர்

## பஞ்சகவ்யம்

இந்துககளின் புனித விலங்காகப் பசு கருதப்பட்டு வருகி றது. செலவத்தைத் தரும் மகாலட்சுமியும் மற்றும் அனைத்துத் தேவர்களும் பசுவின் உடலில வசிப்பவதாக ஐதீகம். இநதுக்கள் பசுவைத் தெய்வமாகப் போறறிவணங்குகினறனர். கோமாதா பூசை செய்கின்றனர். இநது மதச் சடங்குகள் அனைத்திலும் பசுவினிட மிருநது கிடைக்கும் பொருள்களுககு முக்கியத்துவம தரப்படுகிறது.

பசுவினிடமிருந்து கிடைக்கும் பால், தயிர், நெய், சாணம், மூத்திரம் (கோமியம) ஆகிய , ஐந்து பொருள்களையும் மந்திரபூர்வ மாகக்குறிப்பிட்ட அளவில் கலக்கும் போது அது பஞ்ச கவ்யம் எனப்படும்.

தொகுத்தவர்: மு. கோமதி - புத்தூர்.

# முதல் ஆழ்வார்கள்

திரு. பஞ்சு அரங்கநாதன் - ஸ்ரீரங்கம்.

முதலாழவாரகள என மக களால போறறிப் புகழபபடும பொயகை ஆழவார், பூததது ஆழவார, பேய ஆழவார மூவரும சம காலத்தவரகள. திருமாலின ஐநது படைகளில பாஞ்சஜனயம எனற திருசசஙகின அமசமாய பொயகையாரும, கௌமோதகி எனற கதாயுததின அமசமாய பூதததாரும, நாந்தகம எனற உடைவாளின அமசமாய பேயாரும ஐபபசி மாத சுகலபடச (வளர பிறை) அஷடமி, நவமி, தசமி திதிகளில முறையே திருஅவதாரம செயதனர.

திருமாலின திருவிளையாடலால திருககோவலூரில சநதிதது மூவரும முறையே நூறு பாடல்களை உடைய முதல திரு அநதாதி, இரணடாம திருஅநதாதி, மூனறும திருவநதாதி பாடியருளினர. வைணவரகளின தமிழ் வேதமாகிய நாலாயிர திவய பிரபநதததில இமமுதல் மூனறு ஆழவாரகளுடைய பாடல்களும மூன்றும ஆயிரததுள (லிப்கோ பதிபபு பாடல 2082 முதல 2381 முடிய) சேரககபபடடிருக்கினறன இமமூவருடைய பாடலகளிலும திருமாலின முழுமுதனமையின் உயரவும, அடியாரககு எளியன ஆகும் சிறப்பும மறறும கவிதை எழிலும நிறைநது காணபபடும.

இமமூவருடைய அருள வரலாற்றையும, திருப்பாடலகளின் நுண்பொருளையும திருமால திருக்கோவலூரில் இமமூவரையும ஒனறு சேரதது அநதாதி பெறற அருள அநுபவததையும இககடடுரையில சுருககமாகக காணலாம

## பொய்கை ஆழ்வார்

காஞ்சிமாநகரில திருவெஃகா எனனும பதியில உளள பொயகையில பொறறாமரை மலரில கி.பி ஏழாம நூறறாணடில சிததாததிரி ஆணடு ஐபபசி மாதம வளரபிறை அஷ்டமி திதி திருவோணநடசததிரம கூடிய செவவாயககிழமையில பாஞ்சஜனயம எனற சஙகின அமசமாய அவதரிததவர பொயகையார ஆவார இவர திருஅரஙகம, திருவேஙகடம, திருபபாறகடல உளளிடட ஏழு பெருமை பொருநதிய நகரஙகளைப பாடி அருளினாா.

இவர திருமாலிடம மாறாத அனபு கொணடு அவன அலலால தெய்வம இலலை என்ற உறுதியுடன வாழநதாா.

“வாய அவனை அலலது வாழ்ததாது,
கை உலகம்
தாய அவனை அலலது தாம தொழா-
பேய் முலைநஞ்சு
ஊணாக உணடான உருவொடு
பேர் அலலால்
காணா கண, கேளா செவி.
(நாலாயிர திவயபபிரபந்தம
பாடல் - 2092)

## பூதத்து ஆழ்வார்

கடல மலலைததலசயனம (மாமலலபுரம) எனற பதியில மல்லிகைபபுதரின நடுவில நீலோறபவ மலரில கி.பி. ஏழாம நூறறாணடில சிததாததரி ஆணடு ஐபபசி மாதம வளர் பிறை நவமி திதி, அவிடட நடசததிரம கூடிய புதனகிழமையில கௌமோதகி எனற கதாயுதத்தின அமசமாய அவதாரம செய்தவர பூதத்தார ஆவார. இவர திருஅரஙகம, திருவேஙகடம, திருபபாறகடல முதலிய பதினமூனறு பெருமை பொருநதிய நகரஙகளைப பாடி அருளினாா.

இவர மனக்கோயிலில திருமாலை அமைதது, ஞான நீராடடி, பெருமான திருவடிகளில அனபு மலர இடடு செநதமிழப பாககளால் வழிபடடு வநதார. திருமாலை வணஙகும தவமுடைய நான் இனி மணணுலகம ஆள்வதையும, தேவருலகம ஆளவதையும வேணடேன எனறார பூதததார. உலகக கலவி அறிவாலோ, வேத சாஸதிரப புலமையாலோ குலபபெருமையாலோ, செலவச செழிப பாலோ திருமாலை யாரும அடையமுடியாது எனறு மககளுககுத தெளிவுபடககூறி அருளினார பூதததார.

“அடிமூனறில இவவுலகம அனறு
அளந்தாய போதும
அடிமூனறு இரநது அவனி
கொணடாய் படிநினற
நீரோத மேனி நெடுமாலே!
நினஅடியை
ஆரோத வல்லார் அறிந்து.
(நாலாயிர திவ்யப்பிரபநதம்
பாடல2186

ஆனால் இவ்வாறு அறிதற்கு அரிதான இறைவன் அன்பு செய்வார்க்கு எளியன். ஐந்து அறிவு உடைய யானையின் அன்புக்கு ஆட்பட்டு அதை முதலை கடைத்தேற்றிய கருணாகரன் நம்மைக் காக்க மாட்டானோ?

அரியது எளிதாகும் ஆற்றலால மாற்றி
பருக முயல்வாரைப பெற்றால்
கரியதோர
வண்கோட்டுமால்யானை
வென்று முத்தனரே
ண கோட்டு மாமலராள் தாழ்ந்து
(நாலாயிர திவ்யப்பிரபந்தம் பாடல்2203

## பேய் ஆழ்வார்

பேயரே எனக்கு யாவரும்
யானும் ஓர்
பேயனே யாவர்க்கும் - இது
பேசி என்?
ஆயனே! அரங்கா!! என்று
அழைக்கின்றேன்
பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே"
(நாலாயிர திவ்யப்பிரபந்தம பாடல்- 675)

மேற்கண்ட, பரம பக்தரும் முடி வேந்தர் சிகாமணியுமான குல சேகரப்பெருமாள் அருளிச் செய்த திருப்பாசுரத்திற்கு இலக் கணமாய், உதாரணமாய் வாழ்ந் தவர் பேயாழ்வார்.

சென்னை மயிலாப்பூர் ஆதி கேசவப்பெருமாள் கோயில் திருக்கிணற்றில் செவ்வல்லி மல ரின் கண் கி.பி ஏழாம் நூற் றாண்டில் சித்தார்த்திரி ஆண்டு ஐப்பசி மாதம் வளர்பிறை தசமி திதி சதய நட்சத்திரம் கூடிய வியாழக்கிழமையில் திரு மாலின் ஐம்படை யில் ஒன்றான நாந்தகம் என்ற வின் அம்ச மாய் பேயாழ்வார் திரு அவ தாரம் செய்தார். பேயாழ் வார் திருஅரங்கம், திருவேங் கடம், திருப்பாற்கடல், திருப்ப ரமபதம் போன்ற பதினான்கு பெருமை பொருந்திய நகரங்க ளைப் பாடினார். பேய் பிடித் தவர்களைப்போல திருமாலின் பெயரை உரக்கக்கூறுதல், தன் னிலைமறந்து ஆடுதல், பாடு தல் ஆகிய செயல்களால் மக் கள் இவரை பேய்ஆழ்வார் என்று மிகவும் மரியாதையுடன் போற்றினர். இவர் பஞ்ச பூதங் களும், சூரிய சந்திரரும், விண் மீன்களும் பிறவும் எல்லாம் திரு மாலே என்று போற்றினார்.

"தானே தனக்கு உவமன், தன்
உருவே எவ்வுருவும்
தானே தவஉருவும் தாரகையும்-தானே
எரிசுடரும், மால்வரையும், எண-
திசையும் அணடதது
இரு சுடருமாய் இறை
(நாலாயிர திவ்யப்பிரபந்தம பாடல் - 2319)

## மூவரும் கூடுதலும், அந்தாதி பாடுதலும்

திருமாலின் திருவுள்ளப்படி ஒரு நாள் இம்மூவரும் ஒருவரை ஒருவர் யாரென்று அறியா மலே தனித்தனியாகத் திருக் கோவிலூர் சென்று இறை வனை வணங்கினர் இரவு வந்ததும் முதலில் பொய் கையார் ஆலயத்திற்கு அருகே உள்ள ஒரு வைணவர் இல் லம் சென்று அவர் அனுமதி பெற்று அவ்இல்லத்தின் இடை கழியில் படுத்துக்கொண்டார் திருமாலின் திருவிளையாடல் தொடங்கியது பூதத்தாரும் அதே இல்லம் சென்று அனு மதி வேண்டினார். இதை செவி மடுத்த பொய்கையார் "நாரா யண ஒருவர் படுக்கலாம் இருவர் அமரலாம் வாருங்கள்" என்று கூறினார். திருமகள் நாதன் மீண்டும் பேயாரையும் அதே இல்லம் அனுப்ப பொய் கையாரும் "நாராயணா ஒரு வர் படுக்கலாம் இருவர் அமர லாம், மூவர் நிற்கலாம்" என்று கூறினார். இப்படியாக திரு மால் திருவுள்ளப்படி முதலாழ் வார்கள் மூவரும் ஒரு சிறிய இடைகழியில் நிற்கவேண்டிய நிலை ஏற்பட்டது. பின் னர் பொழுதுபோக்காக மூவ ரும் பேச ஆரம்பித்து ஒரு வரை ஒருவர் இன்னார் என்று அறிந்து மகிழ்வுடன் உரையா டிக்கொண்டு இருந்தனர்.

இந்நிலையில் அந்தச் சிறிய இடைகழியில் நிற்கவும் இட மில்லாமல் வேறொருவர் நின்று கொண்டு மிகுந்த நெருக்கத்தை ஏற்படுத்தினார். அவர் மூவரிட மும் அனுமதிபெறவில்லை. வீட் டின் உரிமையாளரிடமும் அனு மதி பெறவில்லை. வெளியே செல்லமுடியாமல் பெருமழை யும், பலத்தக் காற்றும் தடுத் துக்கொண்டிருந்தது. அந்த அழையா விருந்தாளி யார்? என்று தம் ஞான அறிவால் உணர்ந்த மூவரும் இறைவனின் அழகிய மேனியை அகக்கண்க ளால் கண்டு திருமாலின் தெள் ளிய இயல்பினைத் தெவிட்டாத தீந்தமிழ்ப் பாக்களால் அந் தாதி வடிவில் மக்கள் உய்யும் பொருட்டு அருளிச் செய்தனர்.

முதலில் பொய்கையாழ்வார்,

"வையம் தகளியா, வார்கடலே
நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக-
செய்ய
சுடராழியான அடிக்கே சூட்டினேன்
சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று"
--(நாலாயிர திவ்யப்பிரபந்தம் பாடல் - 2082)

